24th January 1964]

### *Film.*

a *6 Q.—Sri M. SUBBIAH CHETTIAR (on behalf of Sri K. S. ABDUL WAHAB) : Will the Hon. the Minister for Public Health be pleased to state whether any film has been banned by the State Government after certification by the Central Board of Film Censors during the year 1962–63 and, if so, the number and names of such films?

The Hon. Srimathi JOTHI VENCATACHALLUM : No.

### *Koothanallur Mirasdar Sangam.*

b *13 Q.—Sri M. SUBBIAH CHETTIAR (on behalf of Sri K. S. ABDUL WAHAB) : Will the Hon. the Minister for Works be pleased to state—

(a) whether any representation has been received from the Koothanallur Mirasdar Sangam to survey 80 acres of wet and dry lands as house plots; and

(b) if so, the action taken or proposed to be taken thereon?

The Hon. Sri V. RAMAIAH : (a) The Koothanallur Mirasdar Sangam had been making representations to the Deputy Tahsildar, Nidamangalam, for the sub-division of house plots as under occupation by each individual houseowner in the village.

(b) The Sangam was asked to pay the charges for the survey and sub-division of the plots but it did not take any action and so the Revenue authorities could not proceed further in the matter.

### *Black-marketing in cement.*

b *14 Q.—Sri M. SUBBIAH CHETTIAR (on behalf of Sri K. S. ABDUL WAHAB) : Will the Hon. the Minister for Works be pleased to state—

(a) whether any suggestion by a Member of the Legislature has been received by the Government in 1962 for tracing black-marketing in cement; and

(b) if so, the action taken or proposed to be taken thereon?

The Hon. Sri V. RAMAIAH : (a) Yes.

(b) The matter is under consideration.

திரு. எம். சுப்பையா செட்டியார் : சிமிண்டு பிளாக் மார்க்கெட்டில் எப்படிக் கிடைக்கிறது? அது கண்ட்ரோலில் இருக்கும் போது எப்படி வெளியே கிடைக்கிறது?

கனம் திரு. வி. ராமைய்யா : எப்படி நடக்கிறது என்று கனம் அங்கத்தினருக்குத் தெரிந்தால் அரசாங்கத்திற்கு எழுதினால் அதை கவனிக்கலாம்.

---

a Postponed question from the list of questions for 18th January 1964.

b Postponed question from the list of questions for 20th January 1964.

[24th January 1964

**திரு. எம். சுப்பையா செட்டியார் :** எப்படிக் கிடைக்கிறது என்பது தெரியாமல் தான் நான் கேட்கிறேன்.

**கனம் திரு. வி. ராமைய்யா :** அரசாங்கத்தைப் பொருத்த வரையில் சிமிண்டு விநியோகம் முறையாக நடக்கவேண்டுமென்று முயற்சி எடுத்து வருகிறோம். அப்படி இருந்தாலும் கூட சிலருடைய நினைப்பு அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில் இருக்கிற சிமிண்டு கட்டுப்பாடு இல்லாமல் வெளியே கிடைப்பதாகப் புகார் செய்கிறார்கள். அரசாங்கம் இதைப் பொருத்தவரை தீவிரமாக பரிசிலனை செய்து முறையான புகார்கள் ஏதாவது வந்தால் அதன்மீது நடவடிக்கை எடுத்துவருகிறது. கனம் அங்கத்தினர் அவர்கள் தாராளமாக வெளியே எப்படி கிடைக்கிறது என்று புகார் எழுதினால் அதைப் பரிசிலனை செய்து அதைத் தடுக்க முயற்சிக்கலாம்.

**திரு. எம். சுப்பையா செட்டியார் :** அரசாங்கத்தின் சப்ளையை மீறி அப்படி வெளியே கிடைத்ததாக ஏதாவது புகார் வந்து அதன் மீது இதுவரை ஏதாவது நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறதா ?

**கனம் திரு. வி. ராமைய்யா :** அதைப்போன்ற புகார்களை அங்கத்தினரைப் போன்றவர்கள் எழுதி அனுப்பவேண்டுமென்பது தான் எங்கள் கோரிக்கை. இதைக்குறித்து இதுவரை பொதுமக்கள் ஏதும் புகார் கூறவில்லை. புகார் வந்தால் கவனிப்போம்.

**திரு. கே. பாலசுப்ரமணிய அய்யர் :** அவர்கள் தான் வாங்குகிறார்களே, அவர்கள் எப்படி புகார் செய்வார்கள் ?

**கனம் திரு. வி. ராமைய்யா :** கனம் அங்கத்தினர் யோசனையைப் போன்று மற்றவர்கள் அவற்றை அரசாங்கத்திற்கு தெரியப்படுத்த வேண்டும்.

**திரு. எம். சுப்பையா செட்டியார் :** சிமிண்டு அவசியம் தேவைப் படும்போது அதை வாங்கத்தானே வேண்டியிருக்கிறது ?

**கனம் திரு. வி. ராமைய்யா :** திருட்டுத்தனமாக விற்பவர்களிடம் வாங்கவேண்டிய அவசியம் இல்லை. அப்படி வாங்குவதில்லை என்று நாம் எல்லோரும் நிர்ணயம் வைத்து விற்பவர்களுக்கு அந்த சந்தர்ப்பத்தைக் கொடுக்காமல் இருக்கவேண்டும். முறையாகப் பயன்படுத்துகிறவர்களுக்கு சிமிண்டு கிடைக்கும். அதற்கு வேண்டிய முயற்சியை அங்கத்தினரைப் போன்றவர்கள் எடுத்து தீவிர பிரசாரம் செய்யவேண்டும்.

**திரு. எம். சுப்பையா செட்டியார் :** அரசாங்கம் அதனால் அதிக அளவில் பொதுமக்களுக்கு சப்ளை செய்ய ஏற்பாடு செய்யுமா ?

**கனம் திரு. வி. ராமைய்யா :** இப்போது உற்பத்தி செய்யப் படுகிற சிமிண்டை அரசாங்கத்தினுடைய இலாகாக்கள் தங்கள் தேவைக்கு வைத்துக்கொண்டு மற்றவைகளை பொதுமக்களுக்கு கிடைக்கும்படி செய்கிறோம். அதைக்குறித்து திரும்பத் திரும்ப

பரிசீலனை செய்து வருகிறோம். நெருக்கடி நேரமாகையால் அரசாங்கத்தினுடைய கட்டிடங்களை இப்போது நிதானமாகக் கட்டவேண்டுமென்றும் அதனால் மீதமாகும் ஏராளமான சிமிண்டை பொதுமக்கள் உபயோகத்திற்கு அளிக்கலாமென்றும் ஏற்பாடாகி இருக்கிறது. மேலும், அரசாங்கத்தினுடைய கட்டிடங்களை சிமிண்டியினால் மட்டும் அமைப்பது என்றில்லாமல் மற்ற சுண்ணாம்பு போன்ற பொருள்களை உபயோகிக்க வேண்டுமென்றும் அதில் ஈடுபட்டிருக்கிறது. அதைப்போல பல கட்டிடங்கள் கட்டப்பட்டு வருகின்றன.

**திரு. எம். சுப்பையா செட்டியார்:** சிமிண்டைத் தவிர மற்ற பொருள்களையும் உபயோகிக்கவேண்டுமென்று மற்றவர்களுக்கும் உத்திரவிட அரசாங்கம் தயாராக இருக்கிறதா?

**கனம் திரு. வி. ராமைய்யா:** மற்ற பொருள்களை உபயோகிக்க வேண்டுமென்று சொன்னோம். சில கட்டிடங்கள் அத்தியாவசியமாக சிமிண்டினால் கட்டவேண்டியிருந்தால் அவற்றை இஞ்சினியர்கள் பார்த்து செய்வார்கள்.

**திரு. கே. பாலசுப்ரமணிய அய்யர்:** கட்டுப்பாடு செய்வதால் ஒழுக்கமும் மட்டுப்பாடு ஆகிறது. ஆகையால் கட்டுப்பாட்டை குறைப்பதற்கு அரசாங்கம் ஏதாவது செய்யுமா?

**கனம் திரு. வி. ராமைய்யா:** சிமிண்டு வினியோகத்தைப் பொருத்தவரையில் இப்போது இருக்கிற கட்டுப்பாடு அமுலில் இல்லாவிட்டால் இப்போது பொது மக்களுக்குக் கிடைக்கும் அளவு கூட சாதாரண மக்களுக்கு கிடைக்காமல் போய்விடும்.

**திரு. ஏ. கே. தங்கவேல் முதலியார்:** கண்ட்ராக்டர்கள் ஓவர் எஸ்டிமேட் போட்டு அதிகமாக சிமிண்டை வாங்கி அவற்றை ப்ளாக் மார்க்கெட்டில் விற்கிறார்கள் என்பது சர்க்காருக்குத் தெரியுமா?

**கனம் திரு. வி. ராமைய்யா:** அதைப்போல ஏதேனும் நடந்திருந்தால் கனம் அங்கத்தினர் அதை எழுதி அனுப்பும்படி கேட்டுக் கொள்கிறேன்.

*Pamban railway bridge*

a* 15 Q.—Sri M. SUBBIAH CHETTIAR (on behalf of Sri K. S. ABDUL WAHAB): Will the Hon. the Minister for Works be pleased to state—

(a) whether the Government of India consulted the State Government regarding the repairs for the Pamban railway bridge; and

(b) if so, the recommendations made by this Government in this regard?

The Hon. Sri V. RAMIAH: (a) No.

(b) Does not arise.

---

a Postponed question from the list of questions for 20th January 1964.